டையவர், தகவிலர்-(இவர்)நடுவுநிலைமையில்லாதவர், என்பது-என்றுசொல்லப்படுவது, அவரவரெச்சத்தாற்காணப்படும்-அவரவருடைய மக்களாலே அறியப்படும், எ-று.

வி. வித்தினாலேமரத்தை அறிவதுபோல அவர்பெற்ற மக்களாலே,தக்காரையுந்தகவிலாரையுந்தானே அறியலாமென்பார், காணப்படுமென்றார். செந்நெலாலாயசெழுமுளைமற்றும்செந்நெலேயாகிவிளைதலால் - மகனறிவுதந்தையறிவு எனப்பிறருமிப்படிச்சொல்லுதல்காண்க. இதினாலே, தக்காரையுந்தகவிலாரையும் அறியுங்குறிசொல்லப்பட்டது.

௱௰௫. கேடும்பெருக்கமுமில்லல்லநெஞ்சத்துக்
கோடாமைசான்றோர்க்கணி.

ப. எது-தீவினையாற்கேடு நல்வினையாற்பெருக்கமும் யாவர்க்குமுன்னே யமைந்துகிடந்தனவவ்வாறறையறிந்தவைகாரணமாகமனத்திற்கோடாமையே யறிவானமைந்தார்க்கழகாவதென்றவாறு.

வி. அவைகாரணமாகக்கோடுதலாவதவைவிப்பொழுதுவருவனவாகக் கருதிக்கேடுவாராமையைக்குறித்தும் பெருக்கம்வருதலைக்குறித்துமொருதலைக்கணிற்றல்-அவற்றிற்குக்காரணம்பழவினையேகோடுதலனென்றுணர்ந்தறிவுதிறற்சாலவினையழுந்தசெய்தவிற்சான்றோர்க்கணியென்றார்.

பு. (கே-ணி)எ-இ-ள். கேடும்-(தீவினையாற்) கெடுதலும், பெருக்கமும்-(நல்வினையாற்)பெருகுதலும், இல்லல்ல-இல்லாமலல்ல,(முன்னேதானேயாவர்க்கும் அமைந்திருந்தனவாம் ஆதலால் அதுதெரிந்து அந்தஇரண்டுங்காரணமாக) நெஞ்ச



த்துக்கோடாமை-மனத்திற் கோணாதிருப்பதே, சான்றோர்க்

கணி-( அறிவிலே)பூரணமானவர்க்கு அழகு, எ-று.

வி. அந்தஇரண்டுங்காரணமாகக்கோணுதலாவது, அவை இப்பொழுதேவருபவையாகநினைத்துக், கேடுவாராநிருப்பதைக்குறித்தும், பெருக்கம்வருவதைக்குறித்தும், சமனாகநில்லாமல்ஒருபாலிலேநிற்பது. அவர்நிறுக்குக்காரணம்பழவினையே, அதுகோணாமலே தம்மைநாடிவந்துஅடையுமென்று உண்மைஉணர்ந்து, நடுவிலேநிற்பது, சான்றோரை அழகுசெய்வதாம், சான்றோர்க்கணியென்றார். பழவினைகோணாமலே தம்மைநாடிவந்தடையுமெனபதற்கு உ-ம்,

பல்லாவுளித்துவிடினுங்குழக்கன்று
வல்லதாந்தாய்நாடிக்கோடலைத், தொல்லைப்,
பழவினையு மன்னதகைத்தேதற்செய்த,
கிழவனைநாடிக்கொளற்கு, எனக்காண்க. இ-ள் அதன்தாயை விகாரப்படுத்திப்பலபசுக்கள்நடுவிலே நிற்கச்செய்து அதன்கன்றை அவிழ்த்துவிட்டபோதும் அந்தக்கன்று தன்தாயைத்தேடிச்சென்று அடையவல்லதாம் பழவினையுந்தன்னை உண்டுபண்ணின கருத்தனைநாடிச்சென்றடைதற்கு அதுபோலும வன்மைக்குணத்தையுடையது, எனக்காண்க.

௱௰௫. கெடுவல்யானென்பதறிகதன்னெஞ்சம
நடுவொரீஇயல்லசெயின்.

ப. எ-று-ஒருவனறனனெஞசநடுவுநிறறலையொழிநது நடுவலலவறறைசசெயய நினைககுமாயின நதினைவையானகெடககடவெனென றுணருமுற்பாதமாகவறிகவெனறவாறு.

வி. நினைதத அளவிலேசெயதலோடொககுமாகலிறசெயினெனறார.

பு. (கெடு-ன்.)எ-இ-ள்.தன்னெஞ்சம்-ஒருவனுடைய ம

ணசானது, நடுவொரீஇ - நடுவுநிலைமையை நீங்கி, அல்லசெயின் - (நடுவுநிலைமை) யல்லாதபாவங்களைச்செய்ய நினைக்குமாகில், (அந்தநினைவைஅப்பொழுதே) கெடுவல்யானென்பதறிக - நான்கெடக்கடவேனென்பதாகஅறிந்துகொள்க, எ-று.

வி. நினைத்தலுஞ் செய்தலோடொக்குமாதலால் நினைப்பின்என்றுமற்செயின் எனவும், அந்தநினைப்பினாலேபின்புகெ



டுவது நிச்சயமாதலாற், காரணத்தைக் காரியமாகவுபசரித்துக் கெடுவல்யானென்பதறிகவெனவுஞ், சொன்னார். அந்தநினைவையென்பது, குறைந்துநின்றது. என்பது என்றதை, என்பதாகவென முற்றெச்சமாக்கி, அறிகவென்னும் வியங்கோள் வினைகொண்டு முடிந்ததெனக்கொள்க.

௱௰௭. கெடுவாகவையா துலகநடுவாக
நன்றிக்கட்டங்கியான்றாழ்வு.

ப. எ-று - நடுவாகநின்றஅறத்தின்கண்ணேதங்கினவனதுவறுமையைவறுமையெனக்கருதாருயர்ந்தோரென்றவாறு.

வி. கெடுவென்பதுமுதனிலைத்தொழிற்பெயர் - செல்வமென்றுகொள்ளுவரென்பதுகுறிப்பெச்சம் - இவ்வுலகின் [illegible] - கேடுபெறுகை [illegible] [illegible]

பு. (கெ-வு.) எ-இ-ள். நடுவாக - நடுவுநிலைமையாகிய நீதியையுடையவனாக, நன்றிக்கண் - தருமத்திலே, தங்கியான் - நிலைத்தவனுடைய, தாழ்வு - வறுமையை, கெடுவாக - வறுமையாக,

கோல்போல, அமைந்து-(இலக்கணங்களாலே) பொருந்தி, ஒருபாற்கோடாமை-ஒருபக்கத்திலே கோணுதிருப்பது, சான்றோர்க்கணி-(நடுவுநிலைமையாகிய நீதி) நிறைந்தோர்க்கு அழகாம், எ-று.

வி. உபமானத்தைவிசேடித்தசமஞ்செய்தலையும, சீர்தூக்குதலையும், உபமேயமாகியசான்றோரிடத்தும், உபமேயத்தை விசேடித்த அமைதலையும், ஒருபாற்கோடாமையையும், உபமானத்தினிடத்துங்கூட்டிச் சான்றோர் சமஞ்செய்தலாவது, பகை புதுமுகம் நட்பென்னுமூன்றிடத்தும், ஒரேதன்மையாக இருப்பதாகவும், சீர்தூக்கலாவது, எழுத்தினாலும் வாய்ச்சொல்லினாலுந் தாம்வாங்கி உட்கொண்ட அவற்றைவிதி முறைப்படி ஆராய்ந்துஉண்மைஅறிவதாகவும், ஒருபாற்கோடாமையாவது, அந்தஉண்மையை மறையாமல் மேற்சொல்லிய மூன்றுதிறத்தவர்க்கும் ஒத்திருக்கும்படி சொல்லுதலாகவுங்,கொள்க. இலக்கணங்களாலமைதலாவது, இன்னும்உபமானம் உபமேயமென்னும் இரண்டிடத்தும்பொருந்தவேண்டுபவைபொருந்துதலாம். உவமையை, உபமானமென்றும் ; பொருளை, உபமேயமென்றுஞ் ; சொல்வதுவடநூல்வழக்கு.

௱௰௯. சொற்கோட்டமில்லதுசெப்பமொருதலையா
வுட்கோட்டமின்மைபெறின்.

ப. எ-து. நடுவுநிலைமையாவது சொல்லின்கட் கோடுதலில்லாதது ஆம்; அஃது ஆவது மனத்தின்கட் கோட்டமில்லாமையைத் திண்ணிதாகப்பெறின் என்றவாறு.

வி. சொல்லுமுறையானது அச்சொல்லுஞ்சொல்-காரணம்பற்றியொருபாற் கோடாததன்றே கூடுமாயின் அறமிட்டதனால் சொல்லுதல் நடுவுநிலையாமென வேயதனெஞ்சுகூடாதாயினவவாய்ச்சொல்லுதல் நடுவுநிலைமையன்றென்பது கூறப்பட்டது.

பு. (சொ-ன்) எ-இ-ள். சொற்கோட்டமில்லது-சொல் விலேகோணவில்லாதிருப்பது, செப்பம்-நடுவுநிலைமையாம், உட்கோட்டமின்மை - மனத்தினிடத்திலேகோணவில்லாதிருப்பதை, ஒருதலையாப்பெறின்-(அது) நிச்சயமாகப்பெற்றால் எ-று.

வி. சொல், விதிமுறையாக அறத்துச்சொல்லுஞ்சொல். அந்தச்சொல், காரணம்பற்றி ஒருபக்கத்திற்கோணுதமனத்தோடுகூடுமானால், தருமம் இருந்தபடிசொல்வது, நடுவுநிலைமையாம்; எனவே, அதனொடுகூடாதானால், அப்படிச்சொல்வது, நடுவுநிலைமை அன்று என்பது, சொல்லப்பட்டது.

இனி இதற்குவேறுரை. சொற்கோட்டமில்லது என்னுமிடத்திலே, இறந்ததுதழுவிநின்றஇழிவுசிறப்புஉம்மைகூட்டிச், சொற்கோட்டமில்லதும், எனவும்; உட்கோட்டமின்மையென்னுமிடத்திலே, இறந்ததுதழுவிநின்றஉயர்வுசிறப்பு உம்மைகூட்டி, உட்கோட்டமின்மையும், பெறின் எனவும்; பொருளுரைத்து : அதினாலே, பொருட்கோட்டமும் மனக்கோட்டமும் இல்லாதபோது, சொற்கோட்டமுடையதும், நடுவுநிலைமையாமெனவும்; அந்த இரண்டும் உண்டானாற்சொற்கோட்டமில்லது, நடுவுநிலைமையாகாதெனவும்; சொற்கோட்டம்,

பொருட்கோட்டம்,மனக்கோட்டம்,மூன்றுமில்லாததே, நடு வுநிலைமைக்குச்சிறந்ததுஎனவும்; கொள்க. இவைஇரண்டுபாட் டாலுநடுவுநிலைமைக்கு இலக்கணஞ்சொல்லப்பட்டது.

## ௱௨௰.

## வாணிகஞ்செய்வார்க்குவாணிகம்பேணிப் பிறவுந்தமபோற்செயின்.

ப. எது-பிறபொருளையுநத மபொருளபோலபபேணிவாணிகஞசெய வாாககுநனறுயவாணிகமாமெனறவாறு.

வி. பிறவுநதமபோறசெயதலாவது-கொளவதுமிகையுஙகொடுபபது குறையுமாகாமலொபபநாடிசசெயதல--இபபாடடுமூனறனுள மூனறையுவிர ணடுமவையநதானோகனவேறையதுவாணிகனோதாகஇறவவிருநிறநதா ரககுமிவவறமவேறுகசிறநதமையின.

பு. (வா-ன்) எ-இ-ள். பிறவும்-பிறர்பொருள்களையும்,த மபோல-தம்முடையபொருள்களைப்போல,பேணிச்செயின்-





பாதுகாத்துச்செய்வாரானால், வாணிகஞ்செய்வார்க்குவாணிக ம்-வியாபாரஞ்செய்வார்க்குவியாபாரம்மிகவும்நன்றாம், எ-று.

வி. சொல்லெச்சமாகவாணிகம் என்பதற்குப் பயனில குறைந்துநின்றது. பிறவுந்தமபோற்பேணிச்செய்தலாவது,

கொள்வதில் அதிகமும், கொடுப்பதிற்குறைவுமாகாமல், நடுவு நிலைமைக்கொத்திருக்கச்செய்வது. இப்படிச்செய்வார்க்கு அந்தவாணிகம் வரை அறுக்கக்கூடாத நல்லாக்கமுடையதென்பார், வாணிகஞ்செய்வார்க்கு வாணிகமெனப்பயனிலைகொடாதொழிந்தார். இந்தநடுவுநிலைமை இவர்க்குமிகவுஞ்சிறந்ததென்பார், இப்பாட்டை அதிகாரமுடிவிலேவைத்தார். இதினாலே, வாணிகர் ஆக்கஞ்சொல்லப்பட்டது.

---

௰௩. அதிகாரம்.

## அடக்கமுடைமை.

ப-ம். அடக்கமுடைமை- அஃதாவது மெய்மொழிமனங்கள் நெறிக்கட்செல்லாதடங்குதலுடையனாதல்- அஃதேதிலார்குற்றம்போற்றுங்குற்றங்காணு நடுவுநிலைமையாளனுக்காகலினது நடுவுநிலைமையின்பின்வைக்கப்பட்டது.

பு-ம். (அட-மை) அதாவது, மனவாக்குக்காயங்கள்பாவவழியிலே செல்லாமல் அடங்குவதுடையனாவதைச்சொல்வது. இதுநடுவுநிலைமையென்கின்றநீதிநெறியாளனுக்கே உரியதாகலின், நடுவுநிலைமையின்பின்வைக்கப்பட்டது.

௱உக. அடக்கமமரருளுய்க்குமடங்காமை
யாரிருளுய்த்துவிடும்.

ப. இ-ள்- ஒருவனையடக்கமாகியவறம்பின்றேவருலகத்துய்க்கும், அடங்காமையாகியபாவந்தங்குதற்கரியவிருளின்கணுய்த்துச்செலுத்துமென்றவாறு.

வி. இருளெனப்பட்டதுநரகவிசேடம் — எல்லாம்பொருளிற்பிறந்துவிடுமென்பதுபோலவுய்த்துவிடுமென்பதொருசொல்லாயிற்று.

பு. (அட-ம்) எ-இ-ள். அடக்கமமரருளுய்க்கும்-அடக்கமுடைமையாகியதருமமானது (தன்னைச்செய்தவனைப்பின்பு) தேவருள் ஒருவனாகச்செலுத்தும, அடங்காமையாரிருளுய்த்



துவிடும்-அடங்காமையாகியபாவமானது அரியநரகத்திலேசெலுத்திவிடும், எ-று.

வி. பாவபுண்ணியங்களிரண்டும் ஒருவர்க்கு இம்மையிலேசெய்யப்படுபொருளாகியகருமங்களாகநிற்குமாயினும்,மறுமையிலே அவற்றைச்செய்தவனைச்செய்யப்படுபொருளாக்கித்தாம்வினைமுதலாகியகருத்தாவாமென்றுசொல்லவந்தவர்,உய்க்கும் என்றும், உய்த்துவிடுமென்றும், சொன்னார். உய்த்துவிடும் என்பது, பிறந்துவிடும், நின்றுவிடும், என்பனவைபோல, ஒருசொல். உய்த்துப்பின்கழியும் எனினும், அமையும். இருள், நரகம். அருமையிருள், ஆரிருளெனவிகாரப்பட்டுநின்றது.

௱௨௨. காக்கபொருளாவடக்கத்தையாக்கம்
அதனினூஉங்கில்லையுயிர்க்கு.

ப. எ-து-உயிர்கட்கடக்கத்தின்மிக்கசெல்வமில்லையாகலானவ்வடக்கத்தையுறுதிப்பொருளாகக்கொண்டழியாமற்காக்கவென்றவாறு.

வி. உயிரென்பது-சாதிபொருமை அஃதீண்டுமக்களுயிர்மேனின்றது அடக்கிப்பயன்கொள்வதவையேயாகலின்.

பு. (கா-கு) எ-இ-ள். உயிர்க்கு-உயிர்களுக்கு, அதனினூங்காக்கமில்லை-அந்த அடக்கத்தின்மிக்கசெல்வமில்லை, (ஆ

தலாலே) காக்கபொருளாவடக்கத்தை-அடக்கத்தை(உறுதிப்) பொருளாகக்கொண்டு (அழியாமலே) காக்கக்கடவது, எ-று.

வி. உயிர் என்றது, சாதி ஒருமை. அறிந்து அடங்கி அந்தப்பலனைக்கொள்வது அதுவாதலால், இங்கே உயிர் என்றது, மக்கள் உயிரையேகுறித்துநின்றது.

௱௨௩. செறிவறிந்துசீர்மைபயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின்.

ப. எது-அடஙகுதலே நமககறிவாவதெனறறிநதநெறியானெபொருளடஙகபபெறினவவடககநலலோராலறியபபடடவனுககுவிழுபபததைக கொடுககுமெனறவாறு.

வி. இலவாழவானுககடஙகுநெறியாவது மெயமுதலியவொனறுநதனவயததவாதல.

பு. (செறி-ன்) எ-இ-ள். அறிவறிந்து-(அடங்குவதேநமக்கு) ஞானமாவதென்று அறிந்து, ஆற்றின்-நெறியினாலே,

௱

௰௩. அதி. அடக்கமுடைமை.

அடங்கப்பெறின்-(ஒருவன்) அடங்கப்பெறுவானானால், செறிவு-(அந்த) அடக்கமானது, அறிந்து-(நல்லோர்களாலே) அறியப்பட்டு, சீர்மைபயக்கும்-(அவனுக்கு) சிறப்பைத்தரும், எ-று.

வி. கிரகஸ்தனுக்கு அடங்குநெறியாவது, மனவாக்குக் காயங்கள்தன்வசப்படுவது. இனிஇக்குறளுக்குவேறோர்முடிபு.

அறிவறிந்து-அறிவினாலே (தனக்கு அறியவேண்டியவற்றை) அறிந்து, ஆற்றின்-(அந்தஅறிந்த) நெறிக்குத்தக, அடங்கப்பெறின் - (மனமொழிமெய்கள்) அடங்கப்பெறுவானானால், செறிவு-அந்தஅடக்கம், அறிந்து-(உயர்ந்தோரால்) அறியப்பட்டு, சீர்மைபயக்கும்-செல்வமுடைமையைத்தரும், எ-று.

இதற்கு, வி. ஆற்றின் என்றவிடத்தில்இன், சாரியையெனக்கொண்டு, கு உருபும், அதன்தகவுப்பொருளும், குறைந்துநின்றதெனக்கொள்க. சுட்டுக்கள், வருவித்துரைக்கப்பட்டன.

௱௨௪. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

ப. எது-இல்வாழ்க்கையாகிய தன்னெறியினின்று வேறுபடாது நின்றடங்கினவனுயர்ச்சி மலையினுமிகப்பெரிதென்றவாறு.

வி. திரியாதடங்குதல்-பொறிகளாற்புலன்களை நுகராநின்றேயடங்குதல்-மலையாகுபெயர்.

பு. (நிலை-து) எ-இ-ள். நிலையிற்றிரியாது-(தனக்குரிய இல்வாழ்க்கை) நிலையிலேநின்றுமாறுபடாமல், அடங்கியான்றோற்றம்-அடங்கினவனுடையஉயர்ச்சி, மலையினுமாணப்பெரிது-மலையின் உயர்ச்சியினுமிகப்பெரிதாம், எ-று.

வி. திரியாதடங்குதல், இந்திரியங்களால்நல்விடயங்களாகிய அநுபவங்களை அநுபவித்தேமனமொழிமெய்கள் அடங்குவது. மலை, பொருளாகுபெயர்.

௱௨௫. எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

ப. எது-பெருமிதமின்றியடங்குதலெல்லார்க்குமொப்பநன்றேயெனி

அமைவெலலாருளளுஞசெலவமுடையாரக்கே வேறொருசெலவமாஞசிறபபி னையுடைததெனறவாறு.

## ௰௩. அதி. அடக்கமுடைமை:

௱க

வி. பெருமிதததினைசசெயயுஙகலவியுஙகுடிபபிறபபுமுடையார அஃதின றியவைததமமானேயடஙகியவழிசசிறநதுகாட்டுமாகலிறசெலவாககேசெலவந தகைததெனறார-செலவததகைததெனறதுமெலிததுநினறது-பொதுவெனபா லாயுமுடனபட்டுச்சிறபபாதலகூறியவாறு - இவவைநதுபாட்டானுமபொ துவகையானடககததுசசிறபபுககூறபபட்டது.

பு. (எல்-து) எ-இ-ள். எல்லார்க்குநன்றாம்பணிதல்-(கரு வியாமல்) அடங்குகிறது எல்லார்க்கும் (பொதுப்பட) நன் மையாம், (ஆயினும்) அவருள்ளும்-அந்த எல்லாருள்ளும், செ ல்வர்க்கேசெல்வந்தகைத்து-செல்வமுடையவர்க்கே (அந்தஅ டக்கம்மேலுமொரு)செல்வச்சிறப்பினையுடையதாம், எ-று.

வி. கருவத்தையுண்டாக்குகின்றகல்வியும், உயர்குடிப்பி றப்பும், பொருளும், வீரமும், முதலாயின உடையவர், அந்த க்கருவமில்லாமலே, அவைதம்மாலே அடங்கினபோது, மே ன்மேலுஞ்சிறந்துகாட்டும், ஆதலால் சிறப்பினுள்ளும், பொ துப்படச்செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்த கைத்தென்பது, செல்வந்தகைத்து என்று, மெலித்தல்விகார மாய்நின்றது. எல்லார்க்குமெனப்பொதுவாக செல்வர்க்கே எனச்சிறப்பாகச்சொல்லியபடி.

உடன்பட்டுச்

இவையைந்து

பாட்டானும், அடக்கமுடைமையின்சிறப்புச்சொல்லப்பட்டது.

௱௨௬. ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றி
னெழுமையுமேமாப்புடைத்து.

ப. எ-து-ஆமைபோலொருவனொருபிறப்பின்கண் பொறிகளையுமடக்கவல்லனாயினவ்வடக்கமவனுக்கெழுபிறப்பின்கண்ணுமரணாதலையுடைத்தென்றவாறு.

வி. ஆமையைந்துறுப்பினையுமிடர்புகுதாமலடக்குமாறுபோலவிவனுமைம்பொறிகளையும்பாவம்புகாமலடக்கவேண்டுமென்பாராமைபோலென்றார்- ஒருமைக்கட்செய்தவினையின்பயனெழுமைதோறுந்தொடருமென்பதிதனானறிக- இதனான்மெய்யடக்கங்கூறப்பட்டது.

பு. (ஒரு-து) எ-இ-ள். ஒருமையுள்-ஒருபிறப்பிலே, ஆமைபோல-ஆமை (ஐந்து உறுப்புக்களையும்விக்கினம்வாராமல் அடக்குவது) போல, ஐந்தடக்கலாற்றின்-(ஒருவன்) ஐம்புலன்களையும் (பாவம்வாராமல்) அடக்கவல்லவனானால், (அந்தவல்லமை அவனுக்கு) எழுமையுமேமாப்புடைத்து-எழுவகைப்பிறப்பிலும் இன்பமுடைத்தாம், எ-று.

௱௨ ௰௩. அதி. அடக்கமுடைமை.

வி. விக்கினம்வாராமல் என்பது, உபமானத்திலே இசை

யெச்சமாகக்குறைந்துநின்றதினாலே, உபமேயத்திலும்பாவம் வாராமலென்பதுவருவிக்கப்பட்டது. பொறிபுலன்களிரண்டு ங்காரணகாரியமாதலால், இரண்டையும் அடக்கவேண்டுமெ ன்பார், பொருட்பட ஐந்தடக்கலாற்றின் என்றார். ஆமை ஐந்துறுப்புகளையும்விக்கினம்வாராமல் அடக்குதல்போலப் புலன்களைப்பாவம்வாராமல் அடக்கினாலின்பமாமென்பதற்கு,

உ-ம்.

ஆமைதன்னுறுப்போரைந்துந்தன்னுளேயடக்கும்போற்,
றீமைசெய்புலன்களைந்துந்தன்னுள்ளேசெறியச்சேர்த்தின்,
வாய்மையுண்மிகழுமென்னைவழுத்தவும்படநின்றமேனற்,
றூய்மைசெய்தவர்களுஞ்சொல்லுவதவன்றன்சொல்லே,

எனக்காண்க. ஒருவனொருபிறப்பிலேசெய்தவினைப்பயனெழுவகைப்பட்டசன்மந்தோறுந்தொடருமென்பதுகருத்து. இதினாலே, சரீர அடக்கஞ்சொல்லப்பட்டது.

## ௱உஎ. யாகாவாராயினுநாகாக்ககாவாக்காற் சோகாப்பர்சொல்லிழுக்குப்பட்டு.

ப. எது -தமமாறகாககபபடுவனவெலலாவறறையுஙகாககமாடடாராயினுநாவொனறனையுஙகாககவதனைககாவாராயிறசொறகுறறததினகடபடடுதனாமெதுனபுறுவொனறவாறு.

வி. யாவெனபதஃறிணைபபனமைவினாபபெயர் அஃறிணையுமமைபுணாசசிவிகாரம-முறறுமமைவிகாரததாறறொககது-சொறகுறறஞசொலவினக

டோனஅகுறம-அலலாபபாசெமமாபபரெனபனபோல சசோகாபபரெ னபதொருசொல.

ப. (யா-ு) எ-இ-ள். யாகாவாராயினும்-(தம்மாலேகாக்கவேண்டிய) எல்லாவற்றையுங்காக்கமாட்டாராயினும், நாகாக்க-நாவு ஒன்றையுங்காக்க, காவாக்கால்-(அதைக்) காக்காவிட்டால், சொல்லிழுக்குப்பட்டு-சொற்குற்றத்தில் அகப்பட்டு, சோகாப்பர்-துன்பப்படுவார், எ-று.

வி. யாஎன்பது அஃறிணைப்பன்மைவினாப்பெயர்; அது இங்கே, ஒன்றுங்குறையாமை என்பதுபட, உம்மைகுறைந்துநின்றது. செம்மை, ஏமம், என்னும்பண்புப்பெயர், செம்

## ௰௩. அதி. அடக்கமுடைமை.

௱௬ மையாதல், ஏமமாதல்,

என்னும்பொருட்டாய்த்தொழிற்பெயராங்கால், செம்மாப்பு, ஏமாப்பு, எனநிற்பதுபோலச், சோகம், என்னும்பண்புப்பெயர்தொழிற்பெயராங்கால், சோகாப்பு, எனநிற்கும். இவை ஏவல்வினையாங்கால், செம்மா, ஏமா, சோகா, எனநிற்கும். இவ்வாறே, முக்காலமுற்றுவினைகளின்

பகுதியாய்நின்று,செம்மாந்தார்,ஏமாந்தார், சோகாத்தார்,செம்மாக்கின்றார்,ஏமாக்கின்றார்,சோகாக்கின்றார்,செம்மாப்பார், ஏமாப்பார், சோகாப்பார், எனவரும். இவற்றுடன்,அர்விகுதி எதிர்காலத்திற்கேயுரித்தாய்ச், செம்மாப்பர், ஏமாப்பர், சோகாப்பர், எனவரும். செம்மை, நேர்மை. ஏமம், இன்பம். சோகம், துன்பம். எனக்காண்க.

௩உ௮. ஒன்றானுந்தீச்சொற்பொருட்பயனுண்டாயி னன்றுகாதாகிவிடும்.

ப. எ-து-தியவாகியசொறகளினபொருளாற பிறாககுவருநதுனபமொன றாயினுமொருவனபககதுணடாவதாயினவனுககு பபிறவறறகளாலுணடான நனமைதீதாயவிடுமெனறவாறு.

வி. தீயசொலலாவன-இவருபபகருமபொயகுறளைகடுஞசொலலெனபன - ஒருவனலலவாகசசொலலுஞசொறகளினகணணேயொனறாயினுநதீசசொறபடுமபொருளினபயனபிறாககுணடாவதாயினெனறுரைபபாருமுளர்.

பு. (ஒன்-ம்) எ-இ-ள். ஒன்றானும்-ஒன்றாயினும், தீச்சொற்பொருட்பயன்-தீயசொல்லின் பொருளால்வரும்பயன் (ஆகிய துன்பம்,) உண்டாயின-(ஒருவனிடத்து)உண்டாமானால், நன்று-(அவனுக்குமற்றத்தருமங்களாலேவந்த) நன்மை, ஆகாதாகிவிடும்-தீமையாயவிடும், எ-று.

வி. தீச்சொல்லாவன, பொய், குறளை, கடுஞ்சொல், என்பவை. ஒருவன், நல்லவையாகச்சொல்லுஞ்சொற்களிலே ஒன்றானுந்தீச்சொற்படும்பொருளின்பயன்பிறர்க்கு உண்டாவதானால், என்றுசொல்வாரும் உண்டு.

இனி, இதற்குப்பிறன்கோட்கூறலாய்ப்பிற்கூறியவுரையே சிறந்துகாட்டிற்றப்போலும், ஒருவன்நல்லவையாகச்சொல்

ஐஞ்சொற்களிலேஒன்றனுந்தீயசொல்லின்பொருளால்வரு
ம்பிரயோசனமானது உண்டானுல்மேலேசொல்லியசொற்களா
ல்வந்தநன்மைமுழுதுந்தீதாகிவிடும், எ-று.

ராசு ௰௩. அதி. அடக்கமுடைமை.

இதற்கு, வி.

இதுவழக்கிடஞ்செய்யுளிடமென்று மிரண்
டிடத்துமேற்கும்.

வழக்கிடத்துப், பொய், குறளை, கடுஞ்சொல்
பயனில்சொல்,

என்னுஞ்சொற்பொருளால்வருவன. இவற்றால்
நன்மைதீதாகிவிடுதலாவது, ஒருவனுள்ளவளாயு
ம்மெய்சொல்லி யொருதரம்பொ
ய்சொல்லுவானுனும், ஒருவன்தன்குற்றத்
தையே உள்ளளவுமாராய்ந்து உரைத்து
ஒருதரம்பிறன்குற்

றத்தை எண்ணி அவன்புறத்துச்சொல்லுவானயினும், இன்சொ
ல்லேயேசொல்லி யொருதரம் கடுஞ்சொல்லைச்சொல்லுவானு,
யினும், பெரும்பயனுடையசொற்களையே சொல்லியொரு
தரம்பயனில்லாதசொல்லைச்சொல்லுவானுனும், முன்பெற்
றநன்மைஇழந்துதீயோனென்றெண்ணநிற்பது. இனிச்செய்

யுளிடத்துத் தீச்சொற்பொருட்பயனாவன, எழுத்தானந்தஞ் சொல்லானந்தம்பொருளானந்தமுதலியவும், பொருத்தவியலு ள்விலக்கியனவும், அணியியலுட்பிரிபொருட்சொற்றொடர்முத லியவாகச்சொல்லிய பதினைந்தும்பிறவுமாமெனக்காண்க. அவையெல்லாம்இங்கேசொன்னால், விரியும். ஒன்றாயினுமென்பது, ஒன்றானுமெனவிகாரப்பட்டு நின்றது. தீச்சொற்பொருட் பயன், தீமை.

௱உகூ. தீயினாற்சுட்டபுண்ணுள்ளாறுமாறாதே
நாவினாற்சுட்டவடு.

ப. எ-து-ஒருவனையொருவனதீயினறசுடடபுணமெயக்கட்கிடப்பினு முளளததினகணஅபபொழுதேயாறுமவவாறனறிவெவவுரையுடையநாவினற சுடட வடு வதனகணஎஞ்ஞான்றுமாறாதெனறவாறு.

வி. ஆறிபபோதலாறதீயினறசுடடதனைபபுணனெனறுமாறாமையினு நாவினறசுடடதனைவடுவெனறுங்கூறினார். தீயுமவெவவுரையுஞ்சுடுதறறொழிலா னொக்குமாறுமையாறதீயினைவெவவுரைகொடிதெனபதுபோதாவினிதகுறிபபா னவநதவேறறுமையலஙகாரம-இவைமூனறுபாட்டானுமொழியடக்கங்கூறப படடது.

பு. (தீ-டு) எ-இ-ள். தீயினாற்சுட்டபுண்-(ஒருவனையொருவன்) நெருப்பினாலேசுட்டபுண்ணானது, உள்ளாறும்-(சரீரத்தி லேகாணப்பட்டிருந்தாலும்) மனத்தினிடத்திலே (அப்பொழுதே) ஆறிப்போம், (அப்படிச்சில்லாமல்) நாவினாற்சுட்டவ டு-(கொடுஞ்சொல்லையுடைய) நாவினாலே (ஒருவன்) சுட்டவ

டுவானது(காயமானது,) ஆறுது-(அந்தமனத்தினிடத்தும்எப்பொழுதும்) ஆறுதாம், எ-று.

வி. ஆறிப்போவதினுலேதீயினூர்சுட்டதைப்புண்ணென்றும், ஆறுதஇினுலேநாவினூர்சுட்டதை வடுவென்றுஞ், சொன்னூர். தீயுங்கொடுஞ்சொல்லுஞ்சுடுகிறதொழிலினுலேயொக்கும் பின்பு, ஆறுமையினுலேதீயினுக்கொடுஞ்சொல் அதிகமெனவருதலால், இதுகுறிப்பினுலே ஒப்புடையிருபொருள் வேற்றுமைபடவந்தவேற்றுமையென்னும்அலங்காரம், இவைமூன்றுபாட்டாலும் சொல்லடக்கஞ்சொல்லப்பட்டது.

௱௩௰. கதங்காத்துக்கற்றடங்கலாற்றுவான்செவ்வி
யறம்பார்க்குமாற்றினுழைந்து.

ப. எது-மனத்தினகணவெகுளிதோனருமறகாததுககலவியுடையனாய் அடஙகுதலைவலலவனதுசெவவியையறககடவுளபாாததுநுமவனையடையுநெறியிலகணினறெனறவாறு.

வி. அடஙகுதலமனமபுறததுபபோவாதறததினகணணேநிறறல-செவவி-தனனுழைசசெனறகேறறமனமொழிமெயகளினியலபுககாலம-இனிபபெறறியானையறநதானேசெனறடையுமெனபதாம-இதனானமனவடககஙகூறபபடடது.

பு. (கத-து) எ-இ-ள். கதங்காத்து-(மனசிலே) கோபம் (உண்டாகாமல்) பாதுகாத்து, கற்றடங்கலாற்றுவான்-(எல்லா நூல்களையும்) படித்து (மன)அடக்கத்தைச்செய்வானுடைய, செவ்வி-சமையத்தை, அறம்பார்க்கும்-தருமமாகிய (தெய்வம்) பார்த்துநிற்கும், ஆற்றினுழைந்து-(அவனை அடைகிறதுக்கேற்ற) வழியிலேபுகுந்து, எ-று.

வி. மன அடக்கஞ்செய்தலாவது, மனம்புறத்திலேசெல்லாமல், தேவபத்தியோகஞானநெறிகளிலேநின்றொடுங்கியிருக்கப்பண்ணுதல். உம்.

சினமிறக்கக்கற்றாலுஞ்சித்தியெல்லாம்பெற்றாலும்,
மனமிறக்கக்கல்லார்க்குவாயேன்பராபரமே, எனக்காண்க.

சமையம், தன்குறைபாடு சொல்லுதற்கேற்றமனமுஞ்சொல்லுமுகமும் இனிமையானவனாயிருக்கின்றகாலம். இந்தக்குணமுடையவனைத்தருமந்தானேசென்று அடையுமென்பது, கருத்து. இதினாலே, மனஅடக்கஞ்சொல்லப்பட்டது.

4

ளீ

௰௪. அதி. ஒழுக்கமுடைமை.

## ௰௪. அதிகாரம்.

# ஒழுக்கமுடைமை.

---

ப-ம. ஒழுக்கமுடைமை-அஃதாவது - தத்தமவருணத்திற்குநிலைக்கு ஓதப்பட்டவொழுக்கத்தினையுடையராதல் - இதுமெய்முதலியவடங்கினார்க்கல்லதுமுடியாதாகலின் அடக்கமுடைமையின்பின்வைக்கப்பட்டது.

பு-ம். (ஒழு-மை) அதாவது, தங்கள் தங்கள் சாதிகளுக்கும் அந்தந்தச்சாதிகள் நிற்கவேண்டிய நிலைகளுக்குஞ்சொல்லப்பட்ட ஒழுக்க நடைகளையுடையவராவதைச்சொல்வது. இது மனமொழிமெய்கள் அடங்கினவருக்கல்லதுமுடியாதாதலால், அடக்கமுடைமையின்பின்வைக்கப்பட்டது.

௱௩௧. ஒழுக்கம்விழுப்பந்தரலானொழுக்க
முயிரினுமோம்பப்படும்.

ப. எ-து-ஒழுககமெலலாாககுஞசிறபபினைததருதலானவவொழுககமு
யிரினுமபாதுகாககபபடுமெனறவாறு.

வி. உயாநதாாககுமிழிநதாாககுமொபபவிழுபபநதருதலிறபொது
படககூறிஞா-கடடுவருவிககபபடடது -அதனைலனமவிழுபபநதருவதா
யதொழுககமெனபதுபெறறும -உயிரெலலாபபொருளினுஞசிறநததாயினு
மொழுககமபோலவிழுபபநதாாரமையினுயிரினுமோமபபபடுமெனறா.

பு. (ஒழு-ம்) எ-இ-ள். ஒழுக்கம்விழுப்பந்தரலால்-ஒழுக்கமானது (எல்லார்க்குஞ்) சிறப்பைத்தருவதினாலே, ஒழுக்கமுயிரினுமோம்பப்படும்-அந்த ஒழுக்கமானது (ஒருவனுடைய) உயிரைப்பார்க்கிலும்பாதுகாக்கப்படும், எறு.

வி. உயர்ந்தார்க்குமிழிந்தார்க்குஞ்சமமாகச்சிறப்பைத்தருவதினாலே,இன்னார்க்கென்றாது பொதுப்படச்சொன்னார். அவ்வொழுக்கமெனச்சுட்டு இடைச்சொல், வருவிக்கப்பட்டது. இதினாலேசிறப்பைத்தருவது, ஒழுக்கமென்பதுபெற்றோம். உயிர் எல்லாப்பொருளினுஞ்சிறந்ததானாலும், ஒழுக்கத்தைப்போலேசிறப்பைத்தராததினாலே, அதைஉயிரினுமோம்பப்படுமென்றார்.

௱௩௨. அதி. ஒழுக்கமுடைமை.

௱௫

௱௩௨.

பரிந்தோம்பிக்காக்கவொழுக்கந்தெரிந்தோம்பித்
தேரினுமஃதே துணை.

ப. எ-து-ஒழுககததினையொனறாலுமழிவுபடாமறபேணிவருநதியுஙகாககவறஙகளபலவறறையு மாராயநதவறறுளிருமைககுந துணையாவதியாதெனறுமனததையொருககிததேரநதாலுந துணையாயமுடிவதவவொழுககமேயாகலானெனறவாறு.

வி. பரிநதுமெனனுமுறறும்மைவிகாரததாறறொககது-இவையிரணடாலுமொழுககததது சிறபபுககூறபபடடது.

பு. (பரி-ணை) எ-இ-ள்.

தெரிந்து-(பலதருமங்களையும்) ஆராய்ந்து, ஓம்பி-(அந்தத்தருமங்களுள் இம்மைமறுமையிரண்டுக்குந்துணையாவது எது என்றுமனத்தைஅடக்கிப்) பாதுகாத்து, தேரினும்-தெளிந்தாலும், அஃதே துணை-அந்த ஒழுக்கமேதுணையாவது, (ஆதலால்) ஒழுக்கம்-ஆசாரத்தை, பரிந்து-(ஒன்றினுலுங்கெடாமல்) வருந்தப்பட்டும், ஓம்பி-பாதுகாத்து, காக்க-காவல்செய்க, எ-று.

வி. தெரிந்தோம்பித்தெரினுமென்றதினுலே, செயப்படுபொருளும், வினைப்பெயரும், வருவிக்கப்பட்டன. காவலுட்பட்டவர்துன்பப்பட்டுமெலியக் காவல்செய்தலுமுண்டாதலால், அதைநீக்குதற்பொருட்டு, ஓம்பிக்காக்கவென்றார். பரிந்து என்ற இடத்தில், உம்மைகுறைந்துநின்றது. அது, வருந்

வாகியவினைகளேபயனாகச்சொல்லப்பட்டன.

ப. (ஓ-ம்) எ-இ-ள். ஒழுக்கமுடைமைகுடிமை-(எல்லா ர்க்குந் தங்கள் தங்கள்வருணத்திற்கு ஏற்ற) ஆசாரத்தையுடைய ராகுந்தன்மையேகுலமுடையராகுந்தன்மையாம், இழுக்கம்-(அந்த ஒழுக்கத்திலே)தவறுகிறது, இழிந்தபிறப்பாய்விடும்-(பிறந்தகுலத்திலேநின்றும்) தாழ்ந்தகுலமாய்விடும், எ-று.

வி. இழிந்தகுலத்தாராணலும் ஒழுக்கமுடையவராணல், அதிலேநின்றும் உயர்ந்தகுலத்தாராவராதலாலே, குடிமையா மென்றும்; உயர்ந்தகுலத்திற்பிறந்தாராணலும், ஒழுக்கத்தி லேதவறினல், தாழ்ந்தகுலத்தாராவராதலால், இழிந்தபிறப் பாய்விடுமென்றுஞ்சொன்னூர். ஒழுக்கம் உண்டானபோது உண்டாகுங்குணத்தைக்காட்டிலும், அதுஇல்லாதபோதுஉண் டாகுங்குற்றம்பெரிதென்பதாம். பிரயோசனம் இடைவிடா மல் உண்டாதலாலே, அந்தவினைவுநோக்கி ஒழுக்கம் உண்டா கிறதும் இல்லையாகிறதுமாகியவினைகளே, குடிமை,இழிந் தபிறப்பு, என்னும்பயனாகச்சொல்லப்பட்டன. பிறப்பு,ஆகு பெயர். இனி இந்தக்குறளுக்குவேறோர்முடிபு.

இழுக்க மிழிந்தபிறப்பாய்விடுமாதலால் ஒழுக்கமுடை மையே குடிமை எனமுடித்து, உயர்ந்தகுலத்திற்பிறந்தாரா யினும் அந்தக்குலத்துக்குஉரியஒழுக்கத்தைக்கைவிட்டால்அதி னலே உடனேதாழ்ந்தகுலத்தாராவதுநிச்சயமாதலால், அந்த நிச்சயந்தோன்ற, ஒழுக்கமுடைமையேகுடிமையென்றூர்என நிதேற்ற ஏகாரம்வருவித்துப்பொருளுரைத்துக்கொள்க.

ருகூ.

மறப்பினுமோத்துக்கொளலாகும்பார்ப்பான்
பிறப்பொழுக்கங்குன்றக்கெடும்.

ப.

எது-கறறவேததநினைமறநதாலுயினுமவவருணைகெடாளை மயிதபி

னை னுமஃதோதிகொளலாமநதணருயாநதவருணநதனெ ஒழுக்கமகுறைநத

கெடுமெனறவாறு.

வி. மறநதவழியிழிகுலததாரு

மாகவினமறககலாகாதெனனுமகருத

தானமறபபினுமெனறா-சிறபபுடையவருணநதிறகுமொழியவேயேனையவரு ணைகடகுமகொளளபபடும.

ய௪. அதி. ஒழுக்கமுடைமை. ருகூ

வி. (மற-ம்)

எ-இ-ள். ஓத்து-(கற்ற) வேதத்தை, மறப் பினும்-மறந்துபோனாலும், கொளலாகும்-(அந்தவருணங்கெ டாதபடியாலேபின்னும் அதை) கற்றுக்கொள்ளலாம், பார்ப்பா ன்பிறப்பு-பிராமணன் குலமானது, ஒழுக்கங்குன்ற-(அவனு டைய)ஆசாரங்குறைந்தால், கெடும்-கெட்டுப்போம், எ-று.

வி. மறந்தபோதுதாழ்ந்தகுலத்தாருவாறுதலால், மற க்கலாகாதென்னுங்கருத்தைக்கொண்டு,

மறப்பினுமென்றார்.

சிறந்தவருணத்துக்குச்சொல்லவே,
மற்றவருணங்களும், ஒழு
க்கங்குன்றக்கெடுமென்பதுத
ானேபெறப்படும்.

௱௩௫. அழுக்காறுடையான்கணுக்கம்போன்றில்லை
யொழுக்கமிலான்கணுயர்வு.

ப. எ-து-அழுக்காறுடையானமாட்டாககமிலலாதாறபோலவொழுக
கமிலலாதவனமாட்டுமுயாச்சிபிலலையெனறவாறு.

வி. உவமையாலொழுககமிலலாதவனசுறறததிறகுமுயாசசியிலலையெ
னபதுபெறறும-எனனை-கொடுபபதழுககறுபபானசுறறமு நலகூடதவின-உய
ாவுஉயாகுலமாதல.

பு. (அழு-வு)

எ-இ-ள். அழுக்காறுடையான்கண்-பொரு
மையுடையவனிடத்திலே, ஆக்கம்போன்று-செல்வம் (இல்லா
தது) போல, ஒழுக்கமிலான்கண்-ஆசாரமில்லாதவனிடத்திலு
ம், இல்லையுயர்வு-உயர்ச்சியில்லை, எ-று.

வி. கொடுப்பதழுக்கறுப்பான்சுற்றமுடுப்பதூஉமுண்ப
தூஉமின்றிக்கெடுமென்பார் ஆதலால், பொறுமையுடையவன்
சுற்றத்திற்குஞ்செல்வமில்லாததுபோல, ஒழுக்கமில்லாதவன்
சுற்றத்திற்கும் உயர்வில்லையென்பது, உவமையாற்பெற்றே

ம். உயர்வு, உயர்குலமாவது.
ருகூ.

ஒழுக்கத்தினொல்காருரவோரிழுக்கத்தி
னேதம்படுபாக்கறிந்து.

ப. ஏது-செய்தற்கருமைநோக்கிபொழுக்கத்தாற்சுருங்கார்-மனவலி யுடையாரவ்வி ழுக்கத்தாற்றமக்கிழிகுலமாகிய குற்றமுண்டாமாற்றையறிந் தெனறவாறு.

வி. ஒழுக்கத்திறக்குக்கமதனையுடையார்மேலேற்றப்பட்டது-கொண் டவிரதமவிடாமையபறிபுரவோரென்றார்.

ரு௰ ௰௪. அதி. ஒழுக்கமுடைமை.

பு. (ஒரு-து)

எ-இ-ள். இழுக்கத்தின்-(ஒழுக்கந்) தவறு கிறதினுலே, ஏதம்-(தனக்குஇழிகுலமாகிய)குற்றமானது, பு டுபாக்கு-உண்டாக, அறிந்து-தெரிந்துகொண்டு, ஒழுக்கத்தி ன்-(செய்வதற்கு அருமையென்றுநினைந்து) ஆசாரத்திலே, ஒல்காரர்-தளரார், உரவோர்-அறிவுடையார், எ-று.

வி. ஒழுக்கத்தினதுதளர்தலை, அதனையுடையவர்மேலே
ற்றப்பட்டது. அழிவினுற்கொண்டவிரதம்விடாததைக்குறித்

து, உரவோர் என்றார். என்னெனில்,

பழியஞ்சான்வாழும்பசுவுமழிவின்றிக்
கொண்டவருந்தவம்விட்டானுங்கொண்டிருந்த
இல்லஞ்சிவாழுமெருதுமிவர்மூவர்
நெல்லுண்டநெஞ்சிற்கோர்நோய், எனக்கொண்டவிர

தத்தையழிவின்றிவிட்டவனேயிகழப்படுதலாற்காண்க. ஒல்கல்; தளர்தல், குழைதல். படுபாக்கு என்றதிற்பாக்கு என்பது வினையெச்சவிகுதி. வான்பான்பாக்கினவினையெச்சம்பிற, என்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. அறிந்து என்னும்வினையெச்சமிங்கே, காரணப்பொருட்டாய், அறிந்ததினாலேயெனநின்று, ஒல்கார் என்னும், தெரிநிலைஎதிர்மறைமுற்றுவினைகொண்டுமுடிந்தது.

௱௩௭. ஒழுக்கத்தினெய் துவர்மேன்மையிழுக்கத்தி
னெய் துவரெய் தாப்பழி.

ப. இ-ள்-எல்லாருமொழுக்கத்தானேமேம்பாட்டையெய்துவர்; அதனினிழுக்குதலானேதாமெய்துதற்குரித்தல்லாதபழியையெய்துவரென்றவாறு.

வி. பகைபற்றிப்படாப்பழி கூறியவழியதனையுமிழுக்கம்பற்றியுலகமடுக்குமென்பதுகொள்ளுமாகலினெய்தாப்பழியெய்துவரென்றார்- இவையிரண்டானுமொழுக்கமுளவழிப்படுங்குணமுமில்வழிப்படுங்குற்றமுங்கூறப்பட்டன.

பு. (ஒழு-பழி) எ-இ-ள். ஒழுக்கத்தின்-(யாவரும்) ஆசாரத்தினாலே, எய்துவர்மேன்மை-மேலாந்தன்மையைப்பொருந்துவார், இழுக்கத்தின்-(அதிலே) தவறுதலாலே, எய்தாப்பழி-(தாம்) பொருந்துதற்கு (உரிமை) யில்லாதநிந்தையை, எய்துவர்-பொருந்துவார், எ-று.

ம௪. அதி. ஒழுக்கமுடைமை.

௱ம௪

வி.

ஒழுக்கத்திலேதவறினவனைப்பகையினாலே ஒருவன் அடாநிந்தைசொல்வானானால், அதுவும் அவனுக்குஅடுக்குமென்று உலகஞ்சொல்லுமாதலால், எய்தாப்பழியெய்துவரொன்றார். இவைகளையந்துபாட்டாலும் ஆசாரமுண்டானபோதுஉண்டாகுங்குணமும், இல்லாதபோது உண்டாகுங்குற்றமுஞ், சொல்லப்பட்டன.

௱௬அ.

நன்றிக்குவித்தாகுநல்லொழுக்கந்தீயொழுக்க
மென்றுமிடும்பைதரும்.

ப. எ-து-ஒருவனுககுநலலவொழுககமறததிறகுககாரணமாயிருமையி லுமினபமபயககுநதியவொழுககமபாவததிறகுககாரணமாயிருமையிலுநது னபமபயககுமெனறவாறு.

வி. நனறிககுவிததாகுமெனபதனுறதீய வொழுககமபாவததிறககுக காரணமாதலுமிடுமபைதருமெனபதனுனலலொழுககமினபநதருதலுமபெற றுமி-ஒனறினறேய வறறைமுடிககுமாகலின இதிலுறபின விவவுகூறபபட்டது.

பு. (நன்-ம்) எ-இ-ள். நல்லொழுக்கம்-(ஒருவனுக்கு)நல் ஆசாரமானது, நன்றிக்கு-தருமத்துக்கு, வித்தாகும்-(காரணமாகிய) விதையாகி (இம்மைமறுமையிரண்டிலும்இன்பம்விளைக்கும்,) தீயொழுக்கம்-பொல்லாதநடையானது,(பாவத்திற்குக்காரணமாகியவிதையாகி) என்றும்-(இம்மைமறுமையிரண்டிடத்தில்)எப்போதும், இடும்பைதரும்-துன்பம்விளைக்கும், எ-று.

வி. வித்தாகுமென்றதினாலே,விளைத்தல்களும்; நல்லொழுக்கம்நன்றிக்குவித்தாகுமென்றதினாலே, தீயொழுக்கம்பாவத்திற்குவித்தாகும்என்பதும்; தீயொழுக்கமிடும்பைதருமென்றதினாலே, நல்லொழுக்கம் இன்பந்தரும் என்பதும்; என்

றும் என்றதினாலே, இம்மைமறுமையிரண்டிடத்தும்என்பது
ம்; பெறப்பட்டன. வித்து நிலத்திலேயூன்றப்பட்டதுபோல,
இந்த இரண்டு ஒழுக்கங்களும் ஒன்று ஒருவனிடத்திலேநிலைத்
திருக்குமானாற்பின்புதன்பயனாகியஇன்பத்தையானுலுந்துன்
பத்தையானுலுந்தருவது நிச்சயமாதலால், அதைவித்தென்ற
து, எது உருவகவலங்காரம். இதினாலேபின்விளைவு, சொல்லப்
பட்டது.

௱௰௨ ௰௪. அதி. ஒழுக்கமுடைமை.

௱௩௯. ஒழுக்கமுடையவர்க்கொல்லாவே தீய
வழுக்கியும்வாயாற்சொலல்.

ப. எது-மறநதுநதீயசொறகளைததம வாயாறசொலலுந தொழிலக ளொழுககமுடையவாககுமுடியாவெனறவாறு.

வி. தீயசொறகளாவன பிறாககுததீஙகுபயககுமபொயமுதலியவுமவரு ணசசிறகுரியவலலனவுமாம அவறறதுபனமையாறசொலலுநதொழிலபலவா யின-சொலசாதிபொருமை-சொலலெனவேயமைநதிருகக வாயாலெனவேண டா துகூறினா நலலசொறகளைபபினறதென நதாமவேணடியதனைசிறபபு முடி நததறகு-இதனைவடநூலாா தாறபாியமெனப.

பு. (ஒழு-ல்) எ-இ-ள் வழுக்கியும்-மறந்தும் தீய-தீமை யையுடைய (சொற்களை,) வாயாற்சொல-(தம்) வாயினாலே சொல்லுந் தொழில்கள், ஒழுக்கமுடையவர்க்கொல்லா-நல் லொழுக்கமுடையார்க்குக்கூடாதவை, எ-று.

வி. தீயசொற்களாவன, பிறருக்குத்தீங்குதரும் பொய் முதலானவையுங், குலத்திற்குத்தகாதவையுமாம். அவைபலவா தலாலே, சொல்லுந்தொழில்களும்பலவாயின. சொல், என்

பது, குறைந்துநின்றது. அது, சாதியொருமை. சொல்லெனவே அமைந்திருக்க, வாயாற்சொல்லெனவேண்டாது சொன்னது, தீயசொற் பழக்கமில்லாதவாய் என்று, அதனைச்சிறப்பித்தற்கு, எனக்கொள்க. இதை, வடநூலார் தாற்பரியமென்பார். நினைத்துச்சொல்லுதலுங்கூடாது என்றதைத்தழுவிநின்றதினுலே, வழுக்கியும் என்ற உம்மை, இறந்ததுதழுவிய எச்சவும்மை. ஒழுக்கமுடையவர்மறந்துசொல்லினும் பிறர்க்குநன்மை தருஞ்சொற்களையேசொல்லுவரென்பதுகருத்து இதினுலே ஒழுக்கமுடையவர்பேசுந்திறஞ்சொல்லப்பட்டது.

௱௪௰.

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

ப. எ-து- உலகத்தோடு பொருந்த வொழுகுதலைக் கல்லாதார் பல நூல்களை யுங் கற்றாராயினு மறிவிலாதாரென்றவாறு.

வி. உலகத்தோடு பொருந்த வொழுகுதலாவது உயர்ந்தோர் பலரு மொழுகியவாற்றா லொழுகுதல் - அந்நூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற் கேலாதனவொழிந்து செல்லாதவற்றுள்ளே சான்றோர் கொண்டு வருதலானவையு மடங்குகவுலகத்தோ டொட்டவென்றாக கல்விக்குப் பயனறிவு மறிவிற்குப் பயனொழுக்கமுமாகலினவ

௰௫. அதி. பிறனில்விழையாமை.

௱௪௧

வி. அறத்தி
ேலநீக்கப்பட்டு அறின்பின்னிற்பது, பாவமா
தலால் அதை,
அறன்கடையென்றார். பாவத்திலேநின்ற (பெ
ண்போனவழியிலேபோவாராகிய) பெண்
வழிச்செல்வாரையும், வேசியரோடும்
தாழ்ந்தகுலப்பெண்களோடுங்கூடி இன்பத்
தை அநுபவிப்பவரையும், போல
அறமும்பொருளும் இழந்
துபோவதுமல்லாமல், பிறன்கடைநின்றவர்,
அச்சத்திலே
தாம்நினைத்த இன்பமும் இழந்துபோவாராதலாலே, பிறன்க
டைநின்றாரிற்பேதையாரில் என்றார். எனவேபிறன்கடைநின்ற
வர்க்கு, அறம்பொருள் இன்பங்கள்மூன்றும் இல்லையென்ப
து, பெறப்பட்டது.

௱௪௩. விளிந்தாரின்வேறல்லர்மன்றதெளிந்தாரிற்
றீமைபுரிந்தொழுகுவார்.

ப. எது-தமமைபபுற நாரிலலாளகணணே பாவஞசெயதலவிருமபி
யொழுகுவாருயிருடையரே னுமிறநதாரேயாவரென றவாறு.

வி. அறமபொருளினபஙகளினபயனெயதாமையின
விளிநதாரினவேற
லலரென றுமவாதீமைபுரிநதொழுநவதிலஅடையவாறுதெளிவுபுறறியாகவிற
றெளிநதாரிலலெனறுஙகூறிஞா.

பு. (விளி-ர்) எ-இ-ள். தெளிந்தார்-(கம்மைச்)சந்தேகப் படாதவருடைய, இர்நீமைபுரிந்து-மனைவியிடத்திலேயாவஞ் செய்வதைவிரும்பி,ஒழுகுவார்-நடப்பவர், (உயிருள்ளவராலு ம்) விளிந்தாரின்-இறந்தவரில்நின்றும், மன்ற-நிச்சயமாகவே, வேறல்லர்-வேறுபாடு உடையவரல்லர், எ-று.

## ௧௫. அதி. பிறனில்விழையாமை. ௱௰௧

வொழுகுதலைககலலாத ராயபலக்றறுமறிவிலா

ரொறுகூறிரு-ஒழுகுதலைகக
றற ல ாவ திடிப படுதவ-இவைபி

ரணபொடடாலுஞ்சொலலாலுஞ்செயலாலும
வருமொழுக கஙகெ லல ாமெ ருவ ாறகுறெ நந த ாக

கூறபபடடன.

பு. (உல-ர்) எ-இ-ள்.
உலகத்தோடொட்டவொழுகல்-
உலகத்தோடுபொருந்தநடப்பதை,

கல்லார்-கற்றிலாதவர், பல
கற்றும்-(நூல்கள்) பலவ

ற்றையுங்கற்றிருந்தாராயினும், அறிவி
லாதார்-ஞானமில்லாதவர், எ-று.

உயர்ந்தவரை, எனக்காண்க.

உலகத்தொடுபொருந்தவொழுகுவதாவது, உயர்ந்தோர்யாவரும்நடந்தவழியிலேநடப்பது. பழையனகழிதலும் புதியன புகுதலும்வழுவலகாலவகையினனேயென்றாராதலால், தருமசாத்திரங்கள்சொல்லியவைகளில் இக்காலத்துக்குவேற்றிராதவைகள்நீங்கிச், சொல்லாதவைகளில் வேற்றிருப்பவைகளைக்கொண்டுவருதலால், அவையும் அடங்க, உலகத்தோடொட்ட என்றும்; கல்விக்குப்பிரயோசனம் அறிவும், அறிவுக்குப்பிரயோசனம் ஒழுக்கமுமாதலால், அந்த ஒழுக்கநடையைக்கல்லாதார், பலகற்றுமறிவிலாதாரென்றும், சான்றோர் ஒழுக்கலைக்கற்றலாவது, அவர்நடந்தபடிநடக்கத்தொடங்குவது. இதினாலே ஒழுக்கமுடையவர் நடக்குந்திறம், எதிர்மறைமுகத்தாற்சொல்லப்பட்டது.

---

௰௬. அதிகாரம்.

# பி ற னி ல் வி ழை ய
# ா மை ம.

---

பு-ம. பிறனில்விழையாமை—அஃதாவது

காமமயககததாறபிற னு

டயவிலலாளைவிருமபாமை-இஃதொழுககமுடையவாமாடடே
நிகழவதாக
விதொழுககமுடைமையினபினவைககபபடடது.

பு-ம். (பிற-மை )அதாவது, (காமமயக்கத்தினாலே) அந்நியனுடையமனையாளைவிரும்பாதிருப்பதைச்சொல்வது. இது ஒழுக்கமுடையார்க்கே உரியதாதலால், அதன்பின்வைக்கப்பட்டது.

ாமிச ௰௫. அதி. பிறனில்விழையாமை.
ாசக.
பிறன்பொருளாட்பெட்டொழுகும்பேதைமைஞாலத்
தறம்பொருள்கண்டார்கணில்.

செவ்வெண் என்றுபெயர். இந்தச்செவ்வெண்,
தொகைபெற
வேண்டுமென்பதுஇலக்கணமென்ற‌னை
னில்,பெயர்ச்செவ்வெ
ண்ணேயென்
றுவெளுவெண்ணுன்குந்தொகைபெறாஉம், என்
னுஞ்சூத்திரநோக்கிக்காண்க.
அதுதொகைபெறுங்கால், அற
ம்பொருளிரண்டும், எனப்பெறும்.
இங்கேபெரு துநின்றது,
செய்யுள்விகாரம். இன்பம்
ஒன்றையுமேகுறிக்கப்படுங்காம
சாத்திரமுடையவர், இந்தத்தீய
ஒழுக்கத்தையும் பாராதிகமெ
ன்றுஞ்சொ
ல்லுவாராதலால்,அறம்பொருள்கண்டார்களில்என்
றார்; எனவே
அந்தப்பேதைமையுடையவரிடத்தில், அறமும்
பொருளும் இல்லையென்பதுபெறப்பட்டது.

ப. எத்துணைத்தனைப்பெருமையுடையாராயினுமொருவாக்கெல்லாதாயமுடி யுங்காமமயக்கத்தாற்றினையளவுந்தம்பிழையையோராதுபிறனுடையமனைவி யைகட்புகுதலென்றவாறு.

வி. இந்திரனைப்போலவெல்லாப்பெருமையுமிழந்துசிறுமையெய்தற்கே கியென்னுமென்றார்-என்னீரநியாதிர்போலவிலைகூறனின்னிரவல்லிநடுந்த காயென்புழிப்போலவுயர்த்தற்கட்பன்மையொருமையொடுமயங்கிற்று-தேரானபிற னென்பதனைத்தம்மையுந்தப்பிறனென்றுரைப்பாருமுளர்.

பு. (எ-ல்) எ-இ-ள். எனைத்துணையராயினும்-எவ்வளவு (பெருமை) யுடையவராயிருந்தாலும், என்னும்-(ஒருவர்க்கு) எப்படியாய்முடியும், தினைத்துணையுந்தேரான்-(காமமயக்கத்திறலே) தினையளவுந்தம்முடையகுற்றத்தையுணராமல், பிறனில்புகல்-அந்நியனுடையமனையிடத்து நுழைவது, எ-று.

வி. இத்திரனைப்போல எல்லாப்பெருமையும் இழந்துசிறுமை அடைவது குறித்து, என்னுமென்றார். என்னீரநியாதிர் போலவிலைகூறனின்னிரவல்லிநடுந்தகாய்; என்றவிடத்தில், நீரநியாதிர் என உயர்த்திச்சொல்லுதற்பொருட்டுவந்தபன்மைப்பால், நின் என்னும் ஒருமைப்பாலோடு இணங்கிநின்றதுபோல; எனைத்துணையர் என உயர்த்திச்சொன்னபன்மைப்பால், தேரான்என்னும்ஒருமைப்பாலொடு, பால்வழுவமைதியாகஇணங்கிநின்றது. தேரான்பிறன் என்பதைத், தம்மைச்சந்தேகப்படாதபிறன், என்றுசொல்லுவாருமுண்டு. இனியிக்குறளுக்குவேறேர்முடிபு.

பிறனில்புகல்-(ஒருவனுடையமனைவியைவிரும்பி) அவ

ன்மனையினிடத்திற்போய்ச்செய்யும்
இழிதொழிலாலே, (தமக்குவருங்குற்றத்தை) தி
னைத்துணையும்-(காமமயக்கத்திஞலே)
தினையளவாஞலும், தேரான்-உணராதவர்,
எனைத்துணையராயினும்-எவ்வளவு
(பெருமை) யுடையவராயிருந்தாலும், என்ஞ
ம்-(அவர்க்கு அதிஞலே)
என்னபிரயோசனமாம், (ஒன்றுமில்லை,) எறு.
இதற்கு வி.
அகலிகையைவிரும்பிப்போன இந்திரனைப்
போலே, யெல்லாப்பெருமையும்
இழந்துசிறுமைப்படுவதைக்குறித்து,
எனைத்துணையராயினுமென்னுமென்ருர். எவனெ
ன்னும்விஞவினைச்சொல், என் எனவிகாரமாய்ப்பெயர்த்தன்
மைப்பட்டுநின்று, ஆம் என்னும்பயனிலைகொண்டு, கற்றதஞ
லாயபயனென்னென்றதுபோல, இன்மைகுறித்துநின்றது(இப்
படியேவழக்கிடத்தும், ஒன்றும் ஆகாது
என்னும்பொருள் பட, என்ஞம், என்ன ஆகும்,
எனவருதல்காண்க. கால்கழுவுதல்

என்றாற்போல, பிறனில்புகுதல் என்றது, இடக்கரடக்கல்; இடக்கர் என்பது, இழிவுசொல்; அதைமறைத்துச்சொல்லுஞ்சொல்லை, இடக்கரடக்கல், என்றுசொல்வது: ஆதலாலே பிறனில்லினிடத்திலேபோய் அவர்செய்யும்இழிதொழிலைத்தாம்சொல்லத்தகாது என்பதுநோக்கிப், பிறனில்புகல் என்றார். அது காரணமாதலால் இங்கே அதன்காரியமாகியகுற்றந்தோன்றநின்றது. தினைத்துணையுந்தேரார் எனச்சொல்லவந்தவர், தேரான் எனச்செறுதலாகியகோபம்பற்றிப் பால்வழுவமைதியாகச்சொன்னார்; உவப்பினுமுயர்வினுஞ்சிறப்பினுஞ்செறலினுமென்னுஞ்சூத்திரநோக்கிக்காண்க. உம்மையிரண்டினுள், முன்னையது, உயர்வுசிறப்பு; பின்னையது, இழிவுசிறப்பு.

௱௪௫. எளிதெனவில்லிறப்பானெய்துமெஞ்ஞான்றும்
விளியாதுநிற்கும்பழி.

ப. எது-எய்துதலெளிதெனக்கருதிப்பின்விளைவுகருதாதுபிறனில்லினைக்கணிறப்பானமாயதவினறியெஞ்ஞான்றுநிலைநிற்குங்குடிப்பழியினையெய்துமென்றவாறு.

வி. இவ்விளக்கணிறத்தலில்லாளைக்கண்ணெறிகடந்துசேறல்.



௰௫. அதி. பிறனில்விழையாமை.

டு. (எ-ழி) ஏ-இ-ள்.

எளிதெனை-(இப்போதுபெறுவது)
அரிதல்லவென்று எண்ணிப், (பின்உண்டாவதை எண்ணாமல்)
இல்லிறப்பான்-(பிறன்) இல்லிடத்துப்புகுவான், (அதினாலே)
எஞ்ஞான்றும்-எக்காலத்திலும், விளிய
ாதுநிற்கும்பழி-இறவா
மலேநிற்கின்ற (குல) நிந்தையாகிய
(பாவத்தை,) எய்தும்-
அடைவான், எ-று.

வி. இந்தக்குறளிடத்தும்,
மேல்வருங்குறளிடத்தும்,
இல்லிறப்பான்என்றது, இடக்கரடக்கல்.

இறத்தல், போதல்.

ாசசு.

பகைபாவமச்சம்பழியெனநான்கு
மிகவாவாமில்லிறப்பான்கண்.

ப. எது-
பிறனிலலாளைநெறிகடநதுசெலவானிடததுபபகையுமபாவ
முமசசமுமகுடிபபழியுமெனனுமிநநானகு குறறமுமொருகாலுநீஙகாவாமெ

னறவாறு.

வி. எனவேஇருமையுமிழத்தல்பெறும்-இவையாறுபாட்டானும்பிற னில்விழைவான்கட்குற்றங்கூறப்பட்டது.

பு. (ப-ண்) எ-இ-ள். இல்லிறப்பான்கண்-(பிறனுடைய மனையாளைவிரும்பி அவன்) மனையினிடத்திலேசெல்பவனிடத்தில், பகைபாவமச்சம்பழியெனநான்கும்-பகையும்பாவமும் பயமும் (குல) நிந்தையுமாகியஇந்தநான்குகுற்றங்களும்,இகவாவாம்-(ஒருக்காலும்) நீங்காதிருப்பவையாம், எ-று.

வி. எனவே இருமை இன்பங்களும் இழந்தவனென்பது பெறப்பட்டது. இவையாறுபாட்டாலும்,பிறன்மனைவியை விரும்புவான்குற்றஞ்சொல்லப்பட்டது.

௱௪௭.

அறனியலானில்வாழ்வானென்பான்பிறனியலாள்
பெண்மைநயவாதவன்.

ப. எ-து-

அறத்தொடியவியல்பொடுகூடியில்வாழ்வானென்றுசொல்லப்படுவானபிறனு [illegible] க்குரிமைபூண்டவனுடையவியல்பினையுடையாளதுபெண்டன்மையைவிரும்பாதவனென்றவாறு.

வி. [illegible]

...கணவனுக்கு- இல்லறஞ்செய்வானெனப்படுவானவனேயென்றவாறாம்.

ப. (அற-ன்) எ-இ-ள்.

அறனியலான்-தருமசுபாவத்தோ

டுகூடி, இல்வாழ்வானென்பான்-இல்லிடத்தி

லே வாழ்பவ

மஙு அதி பிறனில்விழையாமை.

௱டுக

னென்று (எல்லாராலும்) புகழப்படுவோன், பிறனியலாள்-பிற னுக்கு (உரிமைபூண்டு அவன்சாயலின்படிநடக்கும்) நடையினையுடையவளது, பெண்மைநயவாதவன்-பெண்தன்மையை விரும்பாதவன், எ-று.

வி. ஆன், என்னும்மூன்றாம்வேற்றுமையுருபு, இங்கே உடனிகழ்ச்சிப்பொருள்படநின்றது. அவனேஇல்லறத்திற்கு உரியவனென்பது, கருத்து.

௱சஅ.

பிறன்மனைநோக்காதபேராண்மைசான்றோர்க் கறனொன்றோவான்றவொழுக்கு.

ப. எ-து-பிறனமனையாளையுடகொளளாத

பெரியவாணடைமைசால்

புடையாாகறனுமாத்ரமபியவொழுகமுமாமெனறவாறு.

வி. புறபபகைகளைபடக்குமாணமையுடையாாகருமபடபகையாளியகா

மடக்குதற்கருமையினாதனையடக்கியவாண்மையைப்பேராண்மையென்றா-
ஒன்றேவெனப்பொதுமைநீங்கச்சொல்-செய்தற்கரியவற
னுமொழுக்கமுமிதனை
ச்செய்யாமையேயாகுமென்பதாம.

பு. (பிற-கு) எ-இ-ள்.

பிறன்மனைநோக்காத-பிறன்மனை
யாட்டியை (விரும்பிமனத்திற்) குறியாத,
பேராண்மை-பெ
ரிய ஆண்தன்மை,
சான்றோர்க்கு-(புருடத்தன்மை) நிறைந்த
வர்க்கு,
அறனொன்றோ-தருமம்ஒன்றாமோ,
ஆன்றவொழுக்
கு-உயர்ந்த ஒழுக்குமாம், எறு.

வி. புறத்திலிருக்கும்பகைகளையடக்கும் ஆண்மையுடை
யவர்க்கும், உட்பகையாகியகாமத்தையடக்குவது, அருமையா
தலால், அதையடக்கிய ஆண்மையைப், பேராண்மையென்று
ர். செய்வதற்கு அருமையாகிய அறமும் ஒழுக்கமும், பிறன்
மனைநோக்காதிருப்பது,
தானேதரும் என்பதுகருத்து.

௱௪௯. நலக்குரியார்யாரெனினாமநீர்வைப்பிற்

க்குரியார்யாரெனின்-(எல்லா) நன்மைகளுக்கும் உரியவர்யாவரென்றால், பிறற்குரியாள்-பிறனொருவனுக்கு உரிமையானவளுடைய, தோடோயாதார்-தோளைச்சேராதவர், எ-று.

வி. அகலம், ஆழம், பொருளுடைமை, முதலானவைகளாலே அளவிடப்படாமற், பார்த்தமாத்திரமே பயத்தைத்தரத்தக்கநீர், வேறேயில்லாததினாலே, கடலை நாமநீரென்றார். நாம் என்பது, அச்சமாகியபொருளைத்தருவதோர்உரிச்சொல், பேநாமுருஉமெனவரூஉங் கிளவியாமுறைமூன்றுமச்சஞ் சுட்டலுமென்பதினால், அறிக; இங்கே அது நாம, என அகரச்சாரியைபெற்றுநின்றது. நலத்துக்கு என்பது, நலக்குஎன, அத்துச்சாரியைகுறைந்துநின்றது. இம்மைமறுமையிரண்டிலும்நன்மைபொருந்துவார் இவர் என்பதுகருத்து.

௱௫௰. அறன்வரையானல்லசெயினும்பிறன்வரையாள்
பெண்மைநயவாமைநன்று.

ப. எ-து-ஒருவனறததைததனககுரிததாகசசெயயாதுபாவஙகளைசசெயயுமாயினுமவனுககுபபிறனெலலைககணினறாளதுபெண்மையைவிருமபாமையுணடாயினதுநனறெனறவாறு.

வி. இககுணமேமேறபடடதேனாறுமெனபதாமிவைநானகுபாடடாலுமபிறனிலவிழையாதாரகடகுணககூறபபடடது.

பு. (அ-று) எ-இ-ள். அறன்வரையான்-(ஒருவன், தருமத்தைத் (தனக்கு உரிமையாகச்) செய்துகொள்ளாதவனாகி, அல்லசெயினும்-(தருமம்) அல்லாதபாவங்களைச்செய்வானாயினும், (அவனுக்குப்) பிறன்வரையாள்-பிறனுடையஎல்லையிலே நிற்பவளுடைய, பெண்மைநயவாமை-பெண்தன்மையைப் (பார்த்து) விரும்பாதிருப்பது, (ஒன்றும் உண்டானால்) நன்று-(அது) நன்மையுடைத்தாம், எ-று.

வி. இந்த ஒருதருமமுமே, எல்லாப்பாவங்களையும் அட-
க்கி, மேற்பட்டுநிற்குமென்பது, கருத்து. நன்று என்பது,
விகுதிப்பொருள்விகுதிபெற்றுநின்ற பகுபதமெனக்கொள்க.
பிறன்வரையாள்பெண்மைநயவாதவன் அல்லசெய்பான்செயி

௰௫. அதி. பொறையுடைமை.

ாடக

ஊமை ஆபொறுத்தல்வேண்டுமென்பார்,
இதனைப் பொறையு
டைமையைச்சாரவைத்தார்.
இவைநான்குபாட்டானும், பிறனி
ல்லாளைவிரும்பாதவன் குணஞ்சொல்லப்பட்டது.

---

௰௬. அதிகாரம்.

# பொறையுடை
மை.

---

ப-ரை.

பொறையுடைமை-அஃதாவது-காரணமபறறியாதனமடைகை.
யாதொருவனறமமைமயிலைக செயதவழிததாமுமதனையவ

னகட்செய்யாது
பொறுத்தலுடையராதல்-நெறியினீங்கியசெய்தாரையும்
பொறுக்கவேண்டு
மென்றமையினிதுபிறனில்விழையாமையின்பின்வைக்கப்பட்டது.

பு-ம். (பொ-மை) அதாவது,
(காரணம்பற்றியாகிலும்,
அறியாமையினாலே
ஆனாலும், ஒருவன் தமக்குக் குற்றஞ்செய்த
போதானும் அவனிடத்தில்
அந்தக்குற்றத்தைச்செய்யாம
லேமனம்) பொறுத்திருப்பதைச்சொல்வது.

அதிகார அடை
வு, மேலேசொல்லப்பட்டது.

௱௫௧.

அகழ்வாரைத்தாங்குநிலம்போலத்தம்மை
யிகழ்வார்ப்பொறுத்தறலை.

ப. எது-தன்னையகழ்வாரைவீழாமற்
றாங்குநிலம்போலத்
தம்மையிகழ்வாரைப்பொறுத்தறலையாயவறமென்றவாறு.
வி. இகழ்தல்மிகையாயினசெய்தலுஞ்சொல்லலும்.

பு. (அக-லை) எ-இ-ள்.
அகழ்வாரை-(தன்னைத்) தோண்
டுகின்றவரை, தாங்குநிலம்போல-(விழாமலே)

சுமக்கின்றது
மியைப்போல, தம்மையிகழ்வார்-த
ம்மைநிந்திப்பவரை, பொ
றுத்தல்-சகிக்கிறது, தலை-தலைமையான
(சிறந்த) தருமமாம்,
எ-று.

வி. அகழ்வாரைத்தாங்குநிலம்போல,
வென எடுத்துக்
காட்டிய உவமையினாலே,
தம்மைக்கொலைசெய்வதையொத்த
குற்றஞ்செய்வாரையும்பொறுப்பதும்,
பொறுத்திருந்தே அ
வரைப்பாதுகாப்பதுஞ் சிறந்ததருமமென்பது,
பெறப்பட்
டது.

16

௱௫௧ ௰௬. அதி. பொறையுடைமை.

௱௫௨.
பொறுத்தலிறப்பினையென்றுமதனை

மறத்தலதனினுநன்று.

ப. எ-து-பொறைநன்று

கலாமுமொழுக்கநதறகியனறகாலததுமபிறாசெ யதமிகையைப
பொறுக்கவதனையுடகொளளாதபொழுதேமறததலபெறின
பபொறையினுநனறெனறவாறு.

வி. மிகையெனறதுமேறசொலலியனவிசனடனையு
ம-பொறுததாலும
டகொளளபபடுதலினமறததலையதனினுநனறெனறா.

பு. (பொ-ளு)எ-இ-ள்.
இறப்பினை-(பொறுப்பதுநலமா
தலாலேதண்டிக்கக்கூடுமானகாலத்திலும்பிறர்
இகழ்ந்துசொ
ல்லு
தல்பிழைசெய்தலாகிய)மிகுதியை,பொறுத்தல்-பொறுக்
கவேண்டும், அதனை என்றுமறத்தல்-அதை
(மனசிலேவையா
மல்) என்றைக்குமறந்துவிடுவது,
அதனினுநன்று-அந்தப்
பொறுமையினும்நன்று, எ-று.

வி. இறப்பு என்றது, மிகுதி; அது இங்கே,
சொல்லத்தக்
கதுஞ்செய்யத்தக்கதுஞ்சமம்,

சொல்லத்தகாதனுஞ்செய்யத்

தகாதனும்மிகுதி,
யாதலால் அவையிரண்டையுங்குறித்ததின்

றது. மேலேமிகுதியான்மிக்கவைசெய்தாரை
என்ற இடத்து

இந்த உரைபொருந்தாதெனில், பொருந்தும்.
என்னை, சமநி

லையென்பது நடுவுநிலைமை,
அதுதப்பினதுமிகுதி, நடுவுநில

மைதப்பினநிலே, சொல்லத்தகாதவையுஞ், செய்யத்தகாத

வையுமாகிய, மிக்கவைகளை
யெனப்பொருள்படுமாதலாற்கா

ண்க. இவை இரண்டையும்பொறுத்த
இடத்தும், மனத்திலே

நினைக்கப்படுமாதலால், மறப்பதை
அதனினும்நன்றென்றார்.

௱௫௩.
இன்மையுளின்மைவிருந்தொரால்வன்மையுள்
வன்மைமடவார்ப்பொறை.

வியளச்சஉம்மையுங்குறைந்துநின்றன, ஆதலால், மடவார்செ

ய்தகுற்றங்களைப்பொறுப்பதுமல்லாமல், அவரையுந்தாங்குவ து, என்பதுபெறப்பட்டது. அவரையுந்தாங்குதலாவது;அவ

ர்செய்தகுற்றங்களைமறந்து அவரைப்பாதுகாப்பது இதுஎடு த்துக்காட்டுஉவமையாதலால், மேல்வரும்விருந்துவிலக்கலாகி ய

இன்மையைக்குறிக்க, முன்வந்தபொருளில்லாமைகள்பலவு

ம்பொருளுடைமைகளாம், அதுபோல, மேல்வரும்மடவார்

ப்பொறையாகியவன்மையைக்குறிக்க, முன்வந்தமனம்பொ

றிவழிச்செல்லாது அடக்குதல்முதலியபலவல்லமைகளும்எளி மைகளாம், எனக்கொள்க. விருந்துவிலக்கலின்மேர்பட்டதரி த்திரமும், ஒருவர்செய்தகுற்றத்தைப்பொறுத்து அவரையும்

பேணுதலின்மேர்பட்டவல்லமையும்உலகத்தில்லை, யாதலால்,

விருத்தோம்பினவன் எல்லாப்பொருளும் உடையவனுவான்; ஒருவர்செய்தகுற்றத்தைப்பொறுத்து அவரையும்பாதுகாப்பவன், எல்லாவல்லமைகளும் உடையவனுவான்; என்பதுகருத்து.

௱௫௪.

நிறையுடைமைநீங்காமைவேண்டிற்பொறையுடைமை

போற்றியொழுகப்படும்.

ப. எ-து-ஒருவனசாலபுடைமைதனகணினறு நீஙகாமையையவேணடுவ னாயினவனுஙபொறையுடைமையைத தனகணழியாமறகாததொழுசுபபடுமெனறவாறு.

வி. பொறை யுடையாககலலதுசாலபிலலையெனபதாயிறறு-இவைநா னகுபாடடானுமபொறையுடைமையதுசிறபபுககூறபபடடது.

பு. (நி-ம்) ன-இ-ள்.

நிறையுடைமை-(ஒருவன் எல்லாநற்குணங்களுங்குறைவுபடாத) நிறையுடைமையாகிய சால்புடைமையானது,

நீங்காமைவேண்டின-(தன்னிடத்திலே) நீங்காதிருப்பதைவிரும்புவானுனல், (அவனுலே)

பொறையுடைமை.

மை-பொறுமையுடையவனுந்தன்மையை,
போற்றியொழுக
பயிம்-(தன்னிடத்தில் அறியாமலே)
பாதுகாத்துநடக்கப்
படும், எ-று.

வி. பொறுமையுடையவனே,
எல்லாநற்குணங்களும்நி
றைந்தவனென்பதாயிற்று
இவைநான்குபாட்டாலும், பொ
றையுடைமையின்சிறப்புச்சொல்லப்பட்டது.

௱௫௫.

ஒறுத்தாரையொன்றாகவையாரேவைப்பர்
பொறுத்தாரைப்பொன்போற்பொதிந்து.

ப. எது-பிறனைமிகைக்குத்தவரு
செய்தவழி பொறுத்தவனைபொறுத்தாரையறிவுடைய
ரொருபொருளாகமனத்துக்கொள்ளார்தன்னைப்பொறுத்தாரை
பபொன்போலப்பொதிந்துகொள்வரெனவாறு.

வி.

ஈந்தவர்க்காருமத்திகைகுசெய்தவரோடொத்தவ

வி. பொறுத்த

ார்க்குப்பொன்றுந் துணையும்புகழென்ற தனால், ஒறுத்தார்க்கு அவ்வாறேபழியென்பதூஉம், பெறப்ப டும். ஒருநாளையின்பமாவது, அந்த ஒருநாளிலும்நினைத்து முடித்தோம் என்று, கருவித்து இருக்கும், பொய்யின்பமா ம். ஆதாரமாகியஉலகம் அழியப்புகழும் அழியுமாதலால், இவையுடைய உலகம் என்பது, வருவிக்கப்பட்டது.

௱௫௭.

திறனல்லதற்பிறர்செய்யினுநோய்நொந்
தறனல்லசெய்யாமைநன்று.

ப. எது-செயயததகாதகெ

ாடியவறறைததனகடபிறாசெயததாராயினு
)வாககதலலவருநதுனபததிறகுநொநதுதானறனலலாத
செயலகளைசசெய யாதிருததலொருவனுககுநனறெனறவாறு.

வி. உமமைசிற

பபுமமை-துனபததிறகுநோதலாவது-உமமையெரிவா யதிரய
ததுவீழபபாகொலெனறுபரிதல.

பு. (திற-று)

எ-இ-ள். திறனல்ல-(செய்யத்)தகாதவற்றை, தற்பிறர்செய்யினும்-பிறர்தன்னிடத்திலே செய்தாராலும், (அவற்றைப்பொறுத்து) நோய்நொந்து-(அவர்க்கு அதினாலேவருந்) துன்பத்திற்குத்தான்வருந்தி, அறனல்ல-தருமமல்லாதசெயல்களை, செய்யாமைநன்று-(அவரிடத்திலே) செய்யாதிருப்பது (ஒருவனுக்கு) நன்மை, எ-று.

வி. செய்யினும் என்ற உம்மை, இழிவுசிறப்புப்பொருள்படநின்றது.
பிறர்செய்தகுற்றங்களைப்பொறுப்பதுமன்றியவர்க்கு அதினாலேவருந்துன்பத்திற்கும் வருந்துதற்கு, உம்.

தம்மையிகழ்ந்தமைதாம்பொறுப்பதன்றிமற்
றெம்மையிகழ்ந்தவினைப்பயத்தா-லும்மை
யெரிவாய்நிரயத்துவீழ்ப்பர்கொலென்று
பரிவதூஉஞ்சான்றோர்கடன், எனக்காண்க.

௱௫௭ மா. அதி. பொறையுடைமை.

௱௫அ.

மிகுதியான்மிக்கவைசெய்தாரைத்தாந்தந்

# தகுதியான்வென்றுவிடல்.

ம. எது-மனகசெருககாறறவகட
டீபவறறைச செயதாரைததாநதம
முடையபொறையானவெனறுவிடுகவெனறவாறு.

வி. நாமுமவாகடடுபவறறைதசெயது தோலாது
பொறையானவரின
மேமபடடுவெலகவெனபதாம-இவை நானகுபாடடாலும
பிறாசெயதனபொறுததலசொலலபபடடது.

பு (மி து-ல்) எ-இ-ள்,
மிகுதியான்-நடுவுநிலைமைதப்பி னதினாலே,
மிக்கவைசெய்தாரை-(தம்மிடத்திலே)
தகாதவற்றைச்செய்தவரை,
தாந்தந்தகுதியால்-தாம் தம்முடையபொறு
மையினாலே, வென்றுவிடல்-செயித்துவிடுக, எ-று.

வி. தகுதி. க. நடுவுநிலைமை, உ. பொறுமை, ௩. அறிவு, ௪. நற்குணம். மிகுதி. க. அநியாயம், உ. அதிகம், உயர்வு, கூட்டம், பூரிப்பு, துற்குணம், இவைபகுபதமாங்கால், தக்கான்-ள்-ர்-
எம்-தக்கவன்-ள்-ர்-து-வை-மிக்கான்-ள்-ர்-எம்-மிக்கவன்-ள்-ர்-து-வை-எனவும்வரும்.

